[18th March 1961

* 906 *Q.*—SRI S. M. ANNAMALAI) (on behalf of SRI M. P. SARATHI: கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் நகராட்சியில் வடிகால் திட்டத்தை (Drainage Scheme) ஏற்படுத்த என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது ?

(இ) அது எப்போது துவக்கப்படும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Investigation of the Drainage Schemes, Vellore, has not been taken up.

( ) Does not arise.

*Hospital collections (receipts)*

* 907 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியிலும், ஜில்லா தலைநகர் ஆஸ்பத்திரிகளிலும் பொது மக்களிடமிருந்து வசூல் செய்யும் பணத்திற்கு உடனுக்குடன் ரசீது கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir.

SRI N. R. THIAGARAJAN: 1958-ம் ஆண்டு சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியிலே எக்ஸ்ரேக்குப் பணம் கொடுத்து, எக்ஸ்ரே எடுத்துக் கொண்டேன். ரசீதுக்காக நான்கு நாட்கள் நடந்தும், ரசீது கொடுக்கப்படவில்லை. போட்டோவும் கொடுக்கப்படவில்லை. அதே மாதிரி சென்ற ஆண்டு அக்டோபர் மாதத்திலே மதுரையில் உள்ள எர்ஸ்கின் ஆஸ்பத்திரியில் எக்ஸ்ரே எடுத்தேன். அதற்காகப் பணம் கட்டினேன். ரசீது கொடுக்கப்படவில்லை. சுமார் 500 நோயாளிகள் ரசீது கொடுக்கும் வழக்கம் கிடையாது என்று சொல்லுகிறார்கள். அங்கே மோசம் நடக்கிறது. என்று தெரியவருகிறது. இதை அமைச்சர் அவர்கள் தக்கபடி விசாரிப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் ரசீது கொடுக்கப்படவில்லை என்று சொல்லுகிறார். எனக்குக் கிடைத்த தகவலில், அன்றுடம் ரசீது கொடுக்கப்படுகிறது என்று தெரியவருகிறது. கனம் அங்கத்தினருக்கும் அன்றையதினமே ரசீது கொடுக்கப்பட்டதாகத் தகவல் இருக்கிறது.

Even on these two occassions, there was no delay in the issue of receipts to the Member and they were issued to him on the same day on which X-ray charges were collected from him.

SRI N. R. THIAGARAJAN. ரசீதுகள் கொடுக்கப்படவில்லை என்பதைத் தக்க சாட்சியத்துடன் நான் ருசுப்படுத்தத் தயாராயிருக்கிறேன். சர்க்கார் விசாரணை செய்யத் தயாராயிருக்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: சாட்சிகள் வைத்து இதை ஒரு கேஸ் மாதிரி நடத்த வேண்டியதில்லை. குறிப்பாக எந்த தினத்தில் பணம் கொடுத்தார்கள் என்று தெரிவித்தால் நான் விசாரிக்கிறேன்.

SRI N. R. THIAGARAJAN : நான் இதைக் குறித்து கனம் அமைச்சருக்கும், டி.எம்.எஸ்ஸுக்கும் எழுதினேன். கடிதம் போட்டும் பதில் கிடையாது. கனம் அங்கத்தினர்களுக்குச் சரியான முறையில் கவுரவம் கொடுக்கப்படுமா ?

MR. SPEAKER : தபாலிலே எழுதுவதற்குப் பதிலாக கையிலேயே கொடுத்திருக்கலாமே.

*Health Education Council*

* 908 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சுகாதாரக் கல்விக் கவுன்சில் ஒன்றை அமைக்க நம் மாநில சர்க்கார் உத்தேசித்திருக்கிறதா ?

(இ) அப்படியானல் அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Yes, Sir,